உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஞானபேதவிளக்கச் சூருவளி.

யாழ்ப்பாணம்,

சைவப்பிரசாரணர்

சி. செந்திநாதையர்

இயற்றியது.

சென்னை:

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1887.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஞானபேதவிளக்கச்சூருவளி.

பசுக்கள் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என மூவகைப்படும். விஞ்ஞானகலர் ஆணவம் என்னும் ஓர்மல முடையர்; பிரளயாகலர் ஆணவம் மாயை என்னும் இருமல முடையர்; சகலர் ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலமுடையர்; சகலர் சாமுசித்தர் வைநயிகர் பிராகிருதரென மூவகைப்படுவர். "விஞ்ஞானகலர் பிரளயாகலர்போல நூல்வழியானன்றிச்சிவபிரானுலே சிவகதியிற் சேர்க்கப்பெறும் சிவபத்தரே சாமுசித்தரெனப்படுவோர்; மந்ததரமுதலிய சத்திநிபாத முடையோராய், நூல்வழியினுலே முத்திபெற விரும்புவோராயுள்ளவரே வைநயிகரெனப்படுவோர்; ஆற்றலும் அறிவும் விருப்பு மில்லாதோரே பிராகிருதரெனப்படுவோர்." என்றூர் திராவிட பாஷிய கர்த்தாவாகிய சிவஞானசுவாமிகள். திருத்தொண்டர் பெரியபுராணத்திலே கூறப்பட்டநாயன்மார் அறுபத்துமூவரும் பிராகிருதரல்லரென்பது வெளிப்படையாகக்கிடக்கின்றது. இவர்கள் வைநயிகரோ சாமுசித்தரோ என்பதை ஆராய்வேம். வைநயிகர் ஆகம சாஸ்திரத்திலே கூறியபடி, அத்துவசுத்தியாகிய நிருவாணதீக்ஷைபெற்றுக்கொண்டு

சிவஞானநூல்களாகிய சைவசித்தாந்த சாஸ்திரங்களை ஓதி ஓதுவித்து, அவற்றின் பொருளைக் கேட்டுக் கேட்பித்து, கேட்டதைச்சிந்தித்து, சிந்தித்ததைப் பின்பு தெளிந்து, தெளிந்தபடியே அதன்பின் நிட்டைகூடியிருக்கும் இயல்பினோரென்று ஒருரையாசிரியர் கூறுகின்றார்; குருமுகமாகத் திவ்வியாகம வாக்கியங்களின் பொருளைக் கேட்டுணர்ந்தும், அதனைமறவாது நாடோறும் மீட்டும் மீட்டும் சிந்தித்தும், அதனை அறிவிற்றெளிந்தும், தெளிந்தமேலான ஞானத்தோடுகலந்து நிட்டைபுரிந்து நிற்குமியல்பினோரே வைநயிகரெனப் படுவரென்று மற்றோர் உரையாசிரியர் கூறுகின்றார்; கண்ணொளி முதலிய கரணமுதற் புறக்கருவிப் பிரத்தியக்ஷ மிசையாது சிவாகமவெழுத்துக் கண்ணிசைபு பற்றிய விருண்மறைப்பைச் சிறிது சிந்துங் கலைவிளக்குமுதலிய வுட்கருவிபொருந்திச் சிவசத்தித்தித்தழற் சிவாகமவாக்கியப் பொருள்வழிசெல்லுஞ் சிவசத்தி விளக்கிய சிவப்பிரமாண சிற்சத்தியினது செயலாயுந் தனது செயற்கைச் சிற்றுச் சுட்டறிவினுளற்றற்றுச் சுட்டிவிட்டுச் சுருங்கிவிரிந் திதிப்பதாயும் பிரத்தியக்ஷமல்லாப் பரோக்ஷமென்று வடமொழிப்படிக்கும் படர்க்கைச் செயற்கைப் பேரறிவாயு நாதப்பிறகூதிச் சுத்தவித்தை சுத்தகலைகளை யுள்ளுறைச் சோதியாய்வைத்த புத்தி யகங்காரங்களினது போதகெறுவ பிரவாகந் தோய்ந்து சவிகற்பமாயு மிருக்கு மறிவில் அதுசிவம் தான்சிவமென்றொரு பிரகாரம் ஸ்புரித்தறியப்படும் பொருளை [illegible]பொருளாய்ப் ப[illegible]மாய்க் குருபோதிக்கக்கேட்டுச்

சிந்தித்தறியாமலறிந்து நிஷ்டைகூடி நிற்குமியல்பினரேவை நயிகசாத்திய சிவயோகியராவரென்ப.

அறுபத்துமூவரில் யாவரேனும் அத்துவசுத்தியாகிய நிருவாணதிக்ஷை பெற்றுக் குருமுகமாகப்பெற்ற சிவாகமங்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிஷ்டைகூடினாரென்று காணப்படாமையானும், கேட்கப்படாமையானும், அவர்கள் வைநயிகரல்லரென்பது முன்னர்ப்போந்த நியாயங்களினாலே பெறப்படும்; படவே, அவர்கள் பிராகிருதரும் வைநயிகருமல்லாச் சாமுசித்தரென்பது பாரிசேடவளவையானே துணியப்படும்.

அறுபத்துமூவருள்ளே திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்குப் பாலூட்டுதலும், திருநாவுக்கரசுநாயனாருக்குச் சூலைநோய்புகுத்துதலும், சுந்தரமூர்த்திநாயனாருக்கு ஓலைகாட்டுதலுமாகிய வேதாகம விதியிலமையாத திக்ஷைபுரிந்து சிவபெருமான் ஆட்கொண்டார்.

சிவஞானத்தின் பிரிவாகிய அபரஞானம்பரஞானம்என்னும் இரண்டின்குறிகளாகிய உமாதேவியார் திருமுலைகள் இரண்டாதலின், அவ்விருமுலைகளினின்று சொரிந்த அமுதை யுண்ட சம்பந்தமூர்த்திநாயனார் உணர்ந்த ஞானமும் அபரஞானம் பரஞானமென இரண்டாய்முடிந்தன. அபரஞானமாவது கலைஞானமெனப்படும் சாஸ்திரஞானமாகும்; இது பரோக்ஷஞானமெனவும் சிவாகமம் எனவும் படும்; பரஞானமாவது மெய்ஞ்ஞானமெனப்படும் அநுபூதிஞானமாகும்; இது அப

ரோக்ஷஞானமெனவும் அருண்ஞானமெனவும் படும். "சிவன டியேசிந்திக்கும் திருப்பெருகுசிவஞானம்" என்பதிலே தெரி ந்தெடுத்த "சிந்திக்கும்ஞானத்தை" ஆதாரமாகக் கொண்டு, நேர்ந்த நேர்ந்தபடி தெளிதல், கேட்டல், நிஷ்டை என்பவை களை வலிந்திழுத்துச் செலுத்திச் சாமுசித்தராகிய திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுரைக்கேவலம் வைநயிகராக்குவது சிவா பராதமாய் முடியும்.

பெரியபுராணத்திலேயுள்ள திருஞானசம்பந்தமூர்த்தி நா யனுர் புராணத்தை ஆதாரமாகக்கொண்டே சீகாழிப்புராணத் துத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருவவதாரப்படலம் பாடப்பட்டிருக்கின்றது. அப்படலத்திலேஞானசம்பந்தர்இரு ண்டு ஞானமுணர்ந்தமை பதினொராஞ்செய்யுளால் அறியப் படும்; அச்செய்யுள்வருமாறு:—

தடைத்த லுஞானபோனகமுண்ட
தோன்றலாரான்றபல்களக
ளிடைப்புணர்ஞானந்தோய்ந்துதோய்வின்றி
யெவ்வுயிர்க்கண்ணுமோர்நிலையே
படைத்தளித்தழிக்குநிறைபரம்பொருளுட்
படருமெய்ஞ்ஞானமு * மாங்கே
கிடைத்தனரொருதன்ருதையுமாங்கே
கிட்டினர்சிறிதுளம்வெருண்டு.

---

* இருஞானமென்பதும் பாடாந்தரம்,
இருஞானம்=பரஞானம்.

(இ-ள்.) துடைத்தலும் = (திருநிலைநாயகி யம்மையார் ஞானசம்பந்தருடைய கண்ணீரைத்) துடைத்தபோது; ஞானபோனகமுண்ட தோன்றலார் = ஞானப்பாலையுண்டருளிய அப்பெரியோர்; ஆன்றபல்கலைக ளிடைப்புணர் ஞானம் = விரிந்தபலகலைகளிலே அமைந்த ஞானத்தையும் (=கலை ஞானத்தையும்); தோய்ந்து தோய்வின்றி எவ்வுயிர்க்கண்ணும் ஓர்நிலையே படைத்து அளித்து அழிக்கும் நிறை பரம்பொருளுட் படருமெய்ஞ்ஞானமும்=கலந்துங் கலவா தெவ்வுயிர்களிடத்தும் ஒரேபடித்தாய்ப்படைத்துக் காத்து அழித்து நிறைந்த பரம்பொருளாகிய சிவத்தி லதீதப்பட்டுக் கலந்து நிற்கும் மெய்ஞ்ஞானத்தையும்; ஆங்கே இடைத்தனர்=அந்நிலையிலே தானே உணர்ந்தார்.

“ஞானபேதவிளக்கத்திலே” கற்பிக்கப்பட்ட கேட்டலாதி நான்குஞானமும் சீகாழிப்புராண ஆக்கியோருக்குப் புலப்படாது போனமைக்குக் காரணம்யாது?

திருக்கைலாசபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்தார் பண்டைக்காலந் தொட்டுச் சாஸ்திரங்களைக் குருமுகமாகப் பரம்பரையிற் கேட்டுவந்தார் என்பதும் வருகின்றாரென்பதும் எவர்களாலும் மறுக்கப்படாத வாய்மையேயாம். இற்றைக்கு இருநூறு வருஷங்களுக்கு முன்னே இருந்த திருவாவடுதுறை ஸ்ரீ கச்சியப்பமுனிவர் என்போர் சிவஞான சுவாமிகள் சீடரேயாம். இவர் குருவநுக்கிரகம்பூண்டு கிரம

மாகக் கல்விகற்றவரென்பது அவர் இயற்றிய நூல்களாலே சாக்ஷியமாகும். இவர் 'கானமயிலாடக்கண்டிருந்தவான்கோழி' யை ஒத்த சிலர் போன்றவரல்லர். அவர் சிவதருமோத்தரம் முதலிய ஆகமசாரங்களையும் கந்தபுராணமுதலிய புராணசரித்திர சாரங்களையும் தம்மாலியற்றப்பட்ட பெருங்காப்பிய ரூபமாகிய திருத்தணிகைப்புராணம் வாயிலாகப் புலப்படுத்தினர். திருத்தணிகைப் புராணத்து அகத்தியனருள்பெறு படலம் (௩௫௩)வது செய்யுள்வருமாறு:—

மேவருஞானமிரண்டவற்றொன்று
விமலனார்பாததாமரையே
யோவறுமன்பினுணர்திருவளிக்கு
மொப்பிலாவுயர்கலைஞானந்
தாவரும்பவத்தைவேரொடுங்களையுந்
தக்கமெய்ஞ்ஞானமொன்றிவற்றூற்
சாவதும்பிறப்புந்தணப்புறச்சிவத்தைச்
சார்ந்ததுவாய்நிற்றல்யோகம்.

(இ-ள்.) மேவருஞானம் இரண்டு=(பெரியோர்) அடைகின்றஞானம் இரண்டாம்; அவற்றொன்று=அவ்விருஞானங்களுள்ளே ஒன்று; விமலனார் பாததாமரையே ஓவறுமன்பினுணர் திரு அளிக்கும் ஒப்பிலாவுயர் கலைஞானம்=சிவபெருமானுடைய அருட்டிருவடித் தாமரையை நீங்காத அன்பினோடு மறவாதிருக்குஞ் செல்வத்தை ஈட்டுகின்ற ஒப்பில்லாதுயர்ந்த கலைஞானமாகும்; ஒன்று=மற்றொன்று; தாவரும்பவத்தைவே

ரொடுங் களையுந் தக்க மெய்ஞ்ஞானம் = (மற்றோர்பரிசானும்) நீங்காத(பாசத்தின் காரியமாகிய)பிறவியை வேருடனே களையும் தகுதியுடைய மெய்ஞ்ஞானமாகும்.

இவ்விரு ஞானார்த்தங்களும் "சிவனடியே சிந்திக்குமென்னுஞ்" சேக்கிழார் திருச்செய்யுளிலே அமைகின்றனவோ வென்பதை யோசித்துப் பார்ப்போம். அச்செய்யுள் வருமாறு:—

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞான
முவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்.

(இ-ள்.) தவமுதல்வர் சம்பந்தர் = தவசிரேட்டராகிய சம்பந்தப்பிள்ளையார்; சிவனடியேசிந்திக்கும் திருப்பெருகுசிவஞானம் உவமையிலாக் கலைஞானம் = சிவபெருமானுடைய அருட்டிருவடியை மறவாதிருக்கும் செல்வத்தை ஈட்டுகின்ற சிவஞானமாகிய ஒப்பில்லாதுயர்ந்த கலைஞானத்தையும்; பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்=(மற்றோர்பரிசானும்) நீங்காத (பாசத்தின்காரியமாகிய) பிறவியை அறக்களையும் தகுதியினாலோங்கிய(அருண்)ஞானமாகிய உணர்தற்கரிய மெய்ஞ்ஞானத்தையும்; அந்நிலையிற் றாமுணர்ந்தார்=அந்நிலையிலேதானே உணர்ந்தார்.

"சிவனடியேசிந்திக்கும்" என்னும் சேக்கிழார்சுவாமிகள் திருச்செய்யுளிலே காணப்படும் பதங்களுக்குக் கச்சியப்ப

முனிவர் கலைஞான மெய்ஞ்ஞானங்களை விளக்கவந்த விடத்துத்தமது செய்யுளிலே பிரதிபதங்களையே பிரயோகித்திருக்கின்றாரென்பதை ருசுப்படுத்துவாம்:—

| சேக்கிழார் பெரியபுராணம். | கச்சியப்பமுனிவர் தணிகைப்புராணம். |
|---|---|
| சிவன் | விமலனார் |
| அடியே | பாததாமரையே |
| சிந்திக்கும் | ஒவறுமன்பினுணர் |
| திரு | திரு |
| பெருகு | அளிக்கும் |
| உவமையிலா | ஒப்பிலாவுயர் |
| கலைஞானம் | கலைஞானம் |
| பவமதனை | தாவரும்பவத்தை |
| அறமாற்றும் | வேரொடுங்களையும் |
| பாங்கினிலோங்கிய | தக்க |
| மெய்ஞ்ஞானம் | மெய்ஞ்ஞானம் |

சில பதங்கள் இரண்டு செய்யுளினும் குறைந்தும் மிகுந்து மிருக்கும் ; மற்றைய பதங்களெல்லாம் மேலே காட்டியவாறு கண்ணாடியிற் பிரதிவிம்பம்போல ஒத்திருத்தலைக் கண்டும் அங்கீகரியாதவர்க்கு யாம் யாது சமாதானம் செய்யலாம் !

இவ்விருஞானங்களின் உண்மையைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணத்தினின்றும் நிரூபிப்பாம்:—

உமாதேவியார் திருமுலைகள் ஞானமுலைகளா மென்பது (கoo)ம் செய்யுளிலே போந்த "போதமுலை சுரந்தளித்த புண்ணியத்தாயாரையும்" என்றமையினுலே பெறப்படும். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் பரஞானமாகிய மெய்ஞ்ஞானமுணர்ந்தாரென்பது (ஙகங)ம் செய்யுளிலே போந்த "செவ்விய மெய்ஞ்ஞானமுணர் திருஞானசம்பந்தன் வந்தான்" என்றமையினுலும், (சஙசு)ம் செய்யுளிற்போந்த "அருண்ஞானமுண்ட சிரபுரவேந்தர்" என்றமையினுலும், (கஉஙசு)ம் செய்யுளிற் போந்த "பெருகொளிஞானமுண்ட பிள்ளையார்" என்றமையினுலும்,(கஉஙஅ)ம் செய்யுளிற் போந்த "ஏகமாஞ் சிவமெய்ஞ்ஞான மிசைந்தவர் வலப்பாலெய்தி" என்றமையினுலும் பெறப்படும். திருஞானசம்பந்தசுவாமிகள் அபரஞானமாகிய கலைஞானம் கேளாதுணர்ந்தாரென்பது (கஉ௫)ம் செய்யுளிலமைந்த "அந்தமில்சீர் மறைக ளாகமங்களேனை யகில கலைப்பொருளுணர்ந்தாரருளிச்செய்ய" என்பதனுலே பெறப்படும்.

இவ்விருஞானங்களின் உண்மையைத் திருநாவுக்கரசு நாயனுர் புராணத்தினின்றும் நிரூபிப்பாம்:—

திருஞானசம்பந்தப்பிள்ளையார் பரஞானமாகிய மெய்ஞ்ஞானமுணர்ந்தாரென்பது (கஎஎ) ம் செய்யுளிலே போந்த "சிவம்பெருக வளர்ஞானங் குழைத்தூட்ட வமுதுசெய்த வுடையமறைப்பிள்ளையார்" என்றமையானும்; (உசக)ம் செய்யுளிற்போந்த "மெய்ப்பொருண்ஞானம் பெற்றவர்" என்ற

மையானும்; அபரஞானமாகிய கலைஞானமுடையாரென்பது (கஅ௩)ம் செய்யுளிற்போந்த "தெருட்கலைஞானக்கன்று" என்றமையானும் பெறப்படும்.

திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிந்தித்தல், தெளிதல், கேட்டல், நிஷ்டை என்பனவற்றைச் சுட்டறச் சிவபிரானல் உணர்த்தப்பெற்றாராயின், சேக்கிழார்சுவாமிகள் அப்புராணத்திற் செய்யுளொன்றிலேனும் மேலேகூறிய மெய்ஞ்ஞானகலைஞானங்களைப்போலக் கேட்டலாதி ஞானங்களை யாதுகாரணத்தினலே எடுத்து விதந்திலர் ?

மெய்ஞ்ஞானம் கலைஞானம் என்னும் இரண்டையும் திருஞானசம்பந்தப் பிள்ளையர் உணர்ந்தாரென்பதைத் திருவிளையாடற் புராணத்துப் பாண்டியன் சுரந்தீர்த்த படலத் திருபதாஞ் செய்யுளாற் காட்டுதும்; அதுவருமாறு:—

திருமுலைப்பாலினேடு ஞானமுந்திரட்டிச்செம்பொற்
குருமணிவள்ளத்தேந்திக் கொடுப்பவப் பாலன்வாங்கிப்
பருகியெண்ணிறந்த வேதாகமமிவை பற்றிச்சார்வாய்
விரிகலைபிறவுமோதா துணர்ந்தனன் விளைந்தஞானம்.

(இதன்பொழிப்புரை) உமாதேவியார் தமது முலைப்பாலோடு மெய்ஞ்ஞானத்தைக் குழைத்துப் பொற்பாத்திரத்திலே ஏந்திக்கொடுப்ப, அதனைப் பிள்ளையார் வாங்கிப்பருகி எண்ணிறந்த வேதாகமாதி கலைஞானங்களை ஓதாது உணர்ந்தார்; (அங்கிலையிலே அவருக்கு இவ்விரு) மெய்ஞ்ஞான கலைஞானங்களும் விளைந்தன.

திருவிளையாடற் புராண கர்த்தாவுக்கும் சிந்தித்தல், தெளிதல், கேட்டல், நிஷ்டை ஞானங்கள் உடன்பாடல்லனவென்பது பெற்ருேம்.

சம்பந்தப்பிள்ளையார் கேட்டலாதி ஞானப்பாலே உண்டாரல்லர், தூயசிவஞானப் பாலையே சுரந்துண்டாரென்பது உய்யவந்த தேவநாயனு ரருளிச்செய்த திருக்களிற்றுப்படியார்ச் செய்யுளானுந் துணியப்படும். அதுவருமாறு:—

சுரந்த திருமுலைக்கே தூயசிவ ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த
தனமுடையா டென்பாண்டிமா தேவிதாழ்ந்த
மனமுடையாளன்பிருந்தவாறு.

சிவபெருமானுடைய திருவடியை மறவாமலிருக்கச்செய்யும் செல்வத்தைக்கொடுப்பது (முதலாமடியில்) ஓர் சிவஞானமேயாக, பிறவியை வேரோடு அறுப்பது (இரண்டாமடியில்) மற்ருேர் ஓங்கிய ஞானமேயாக, நுண்ணுணர்வுடையோர்க்கன்றி அவ்விருஞானங்களின் பேதம் சிற்றுணர்வுடையோர்க்குப் புலப்படாதென்ன முகிழ்த்த பெருங்கருணையினலே, சேக்கிழார் நாயனர் அவற்றை இவைதாமெனப் பெயர் மாத்திரையினலேகாட் டப்புகுந்து, முன்னையதைக் கலைஞானமென்றும், பின்னையதை மெய்ஞ்ஞானமென்றும் நிரனிறைப் பொருள்கோளை மேற்கொண்டு (மூன்ரும் அடியிலே) அவ்விருஞானங்களையும் அமைத்தருளினர். இதனற் சேக்கிழார் வெற்றெனத்

தொடுத்தாரென்னுங் குற்றமும், கச்சியப்பமுனிவர் செய்யுளிலே இரண்டு ஞானங் குறைவுபடக் கூறினரென்னுங்குற்றமும் தூரம்போய்த் துச்சமாய்விடும். கோழிப்புராணகர்த்தாவானவர் திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் கலைஞானம் மெய்ஞ்ஞானமென்னும் இரண்டையுமே அங்கிலேயிலுணர்ந்தாரென்கின்றமையானும், கச்சியப்பமுனிவர் இதுவே உண்மைஅர்த்தமென்று சந்தேகமின்றித்தெளிய விளக்கினின்றமையானும், யாம் உரைத்த இருஞானவுரையே மேலே காட்டியவாறுவச்சிரதம்பம்போல உடைக்கப்படாது நாட்டப்படும்.

ஒழிவிலொடுக்கச் செய்யுளுக்குரைபகர்ந்த சிதம்பரசுவாமிகள் "வேதாகமங்கள் கூறிய பலசமய நெறிகளையும் சமயங்கட்குரிய கடவுளரையும் கடந்துநின்று அக்கடவுளருக்கெல்லாம் முதல்வனையே திருஞானசம்பந்தப்பிள்ளையார் பரஞானக்கண்ணினலே உணர்ந்துபுகழ்ந்துசுட்டிநின்றார்" என்றமையினலே திருஞானசம்பந்தருக்குச் சிந்தித்துத் தெளிந்துகேட்டு வந்த நிஷ்டை இல்லையென்பது பெற்றும்.

சோழமண்டலத்திலேயுள்ள சிதம்பரத்தைச் சார்ந்த கொற்றவன்குடியி லெழுந்தருளியிருந்த சந்தானசாரியர்களுள்ளே ஒருவராகிய உமாபதிசிவாசாரியசுவாமிகள் செய்தருளியதிருச்செய்யுளின் ஓர் பாகம் வருவாறு:—

"உயர்ஞானமிரண்டாமாறுமலமகலவகலாத மன்னுபோதத்திருவருளொன்றென்றதனைத்தெளியவோதுஞ்சிவாகமம்"

(இ-ள்.) உயர்ஞானம் இரண்டாம்=உயர்வாகிய ஞானம் இரண்டாகும்; ஒன்றுமாறுமலமகல அகலாத மன்னுபோதத் திருவருள்=ஒன்று (மற்றோர்பரிசானும்) நீங்காத (பிறவிக்குக் காரணமாகிய) பாசம் அறுமாறு பிரியாது நிற்கும் திருவருண் ஞானமாகும் (=மெய்ஞ்ஞானம்.) ; ஒன்று அதனைத் தெளிய ஓதும் சிவாகமம்=மற்றொன்று அத்திருவருளைமறவாதிருக்கத் தெளியஞானத்தை உணர்த்தும் சிவாகமமாம் (=கலைஞானம்); மேலேபோந்த திருவருண்ஞானத்தையே சேக்கிழார் "பவமதனையறமாற்றும் பாங்கினிலோங்கியஞானம்" என்றார். பிறவிக்குக் காரணமாயுள்ளது பாசமென்பதும், பாசத்தின்காரியமாயுள்ளது பிறவியென்பதும் "தொல்லையிரும்பிறவிச்சூழுந்தளைநீக்கி" என்றதிருவாக்கினாலேபெறப்படும். ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்றும் பாசமெனவும் மலமெனவும்படும் ; கன்மபாசத்தினாலே பிறவியுண்டாகின்றமையால் பிறவியாகிய தாள் (பாசம்) என்றுபொருள் கொள்வதினும், பிறவிக்குக்காரணமாகிய பாசமென்று பொருள்கொள்வதே சிறப்பாம்.

சிருட்டிகிருத்தியம் நடராசபெருமானுடைய டமருகத்தினும், திதிகிருத்தியம் அபயகரத்தினும், சங்காரகிருத்தியம் அக்கினியகலினும், திரோபவகிருத்தியம் ஊன்றியபாதத்தினும், பாசநீக்கத்திருவருட்கிருத்தியம் குஞ்சிதபாதத்தினும் தோன்றும் ; ஆதலால் இவ்வருட்டிருவடியையே எப்போதும் மறவாது நாடு. (உண்மைவிளக்கம்). "தோற்றந் துடியதனிற் றேயுந்திதியமைப்பிற் சாற்றியிடு மங்கியிலே சங்காரமூற்றமா

மூன்று மலர்ப்பதத்தே யுற்றதிரோதமுத்தி நான்றமலர்ப்பாதத்தே நாடு." இதனால் இவ்வருட்டிருவடி ஞானத்தை மறவாதிருக்கத்தெளிய உணர்த்துவது சிவாகம சிவஞானமாமாதலிற் சேக்கிழார்நாயனார் அதனைச் "சிவனடியே சிந்திக்குந்திருப் பெருகுசிவஞானம்" என்றார்.

பாண்டிமண்டலத்திலுள்ள துவாதசாந்தபுரமாகிய மதுரையிலெழுந்தருளியிருந்த சிவப்பிரகாசருடைய சிவப்பிரகாசசித்தாந்த வியாக்கியானத்தினாலே திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதலியசமயாசாரியர்கள் மூவருக்கும், காரைக்காலம்மையார் முதலாயினோர்க்கும் உண்டாகிய ஞானம் திருவருண்ஞானமாமெனவும், அருணந்திசிவாசாரியர்முதலிய சந்தானாசாரியர்களுக் குண்டாகிய ஞானம் சிவாகமஞானமெனவும் பெறப்பட்டு, திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்கு எய்திய மெய்ஞ்ஞானம் ஓதி ஓதிவித்து சிந்தித்துத்தெளிந்து கேட்டுக் கேட்பித்துவந்தமையினால் உண்டாகியதன்றென்பதும், சந்தானாசாரியர்களுக்கு எய்திய மெய்ஞ்ஞானம் ஓதி ஓதுவித்துக் கேட்டுக்கேட்பித்துச் சிந்தித்துத்தெளிந்து வந்தமையால் உண்டாயதென்பதும் பெறப்பட்டன.

கேட்டலாதிநான்குஞானமும்சேக்கிழார்செய்யுளிலேபொருந்துமோவென யோசித்துப்பார்ப்பேம். ஞானபேதவிளக்கமுடையார் முதலாமடியிலே "சிந்திக்குஞ்ஞானம்" சிந்தித்தல்ஞானத்தையும்,இரண்டாமடியிலே "பாங்கினிலோங்கியஞா

னம்" தெளிதல் ஞானத்தையும், மூன்றாமடியிலே கலைஞானம்" கேட்டல் ஞானத்தையும் "மெய்ஞ்ஞானம்" நிஷ்டைஞானத்தையும் உணர்த்தியவென்கின்றார். முதலாமடியிலேயுள்ள எட்டுச்சொற்களுள்ளே, நாலாஞ்சொல்லாகிய "சிந்திக்கும்" என்னும் பதத்தையும், எட்டாஞ்சொல்லாகிய "ஞானம்" என்னும் பதத்தையும் தேடிப் பிடுங்கிப் பிணைத்துச், செய்யுளிலே தமது கொள்கைப்படி கேட்டல் ஞானத்தை முதற்கண்ணேயாவது இரண்டாவதாகவாவது எடுக்கவகையிலராய்ச் "சிந்திக்கும் ஞானத்தை" முதற்கட் டொடுத்தார். தெளிதல், கேட்டல் நிஷ்டை என்னும் மூன்றுக்கும் பொருள்கொள்ள ஓர் பதத்துணுக்கையேனும் இரண்டாம் மூன்றாமடிகளிலே காணப்படுகின்றதோ என்பதை விவேகிகளே பாருங்கள்! அச்செய்யுளிலே தமது கொள்கைப்படி காணப்படும் நான்குஞானங்களுக்கும் பிரமாணம் "கேட்டலுடன் சிந்தித்தறெளிதனிட்டை கிளத்தலெனவீரிரண்டாங் கிளக்கின்ஞானம்" என்னும் சித்தியார்ச்செய்யுளையே நீட்டி, இப்பிரமாணத்தை ஒருவரும் அசைக்கமுடியாதென்று புழுகி மகிழ்கின்றார். இத்திருச்செய்யுளின் நான்குஞானத்தையும் மறுக்க ஒருவராலுமியலாதென்பதை யாமும் அவரோடுசேர்ந்து அங்கீகரிக்கின்றேம். சேக்கிழார் செய்யுளிலே கற்பிக்கப்படும் சிந்தித்தலாதி நான்கு ஞானமுறைப்படி, சித்தியாரிலும் "சிந்தித்தறெளிதல் கேட்டலுடன் நிஷ்டை என்று காணப்படாமையானும்" சித்தியாரிலே சொல்லிய "கேட்டலுடன் சிந்தித்தறெளிதனிட்

டை" என்பது சேக்கிழார் செய்யுளிலே காணப்படாமையா னும், அவ்வுரைபோலியுரையாகப் போக்கடிக்கப்படும். இத ற்குச் சமாதானம் சொல்லுமாறுதொடங்குவாரேல், அதுசேக் கிழார்சுவாமியைப் பாடவறியாரென்று அவரைத்தூஷிக்கத் தலைப்பட்டதாய் முடியும். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அதிதீவிரதர பக்குவதசையை அடைந்து நின்றமையினாலே அவரிடத்திலே செல்லும்வண்ணம் விரைந்து கேட்டலாதிஞா ன்குஞானங்களும் "நீமுந்துவையோ ? நான் முந்துவேனோ?" என்று ஓடி வந்தவிடத்திலே இடறுப்பட்டுத் தலைகீழாய்ப் போனமையை அறிந்து சேக்கிழார் பாடினாரென்று சொல்ல த்துணியினும் அதுவும் தூஷணமாய்முடியும்.

அங்ஙனமாதலின் கேவலம் வைநயிகர்களுக்குச் செப்பப் படும் கேட்டலாதிஞானங்களை நம்மேற்கொண்ட கோபத்தினா லேனும் எல்லைகடந்த பக்திபூண்ட சாமுசித்தராகிய திருஞா னசம்பந்த சுவாமிகளிடத்திலே செலுத்தாதிருக்கும்படி பன் முறையும் உலகறியக்கேட்டுக்கொள்கின்றேம்.

திருச்சிற்றம்பலம்.

---

# விளம்பரம்.

---

| | விலை | தபாற்கூலி |
|---|---|---|
| கந்தபுராணநவநீதம் | அணா 12 | அணா 1 |
| விவிலியகுற்சிதம் | 2 | பை 6 |
| ஞானபோதவிளக்கச் சூறாவளி | | |

☞ இப்புத்தகங்கள் சென்னைப்பெத்துநாயக்கன் பேட்டைத் தங்கசாலைவீதி 313-வது நம்பர் வீட்டிலிருக்கும் சி - சிவசம்புநாவையரிடத்திலே பெறப்படும்.